உ

கணபதி துணை.

களப்பாள்

என்னும்

திருக்களாந்தை

# ஆதித்தேச்சுரவைபவம்

இஃது

கருப்புக்களர்

திருவருள் சுப்பைய சுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

திருக்களர்

மு. சுவாமிநாத மாதவராயன்

என்னும்

மு. சுவாமிநாத உபாத்தியாயன் எழுதியது.

திருக்களர்

வே. பிச்சையப்பதேவர் வகையறக்களால்

திருவாரூர்

கருணாநிதி அச்சுநிலயத்தில் பதிப்பித்தது.

1941.




# முகவுரை.

---

கடல்புடைசூழ்ந்த நெடுநிலவுலகிலே, ஏனாட்டியபுகழ் சோனாட்டிடையிலே, புறங்கரம்பைநாட்டு இராசதானியாகிய களப்பாள் என்னும் களந்தை நகரத்திலே, கருவூர்த்தேவர் அருளிச்செய்த திருவிசைப்பாப் பெற்றுவிளங்கும் **ஆதித்தேசுரர்** சம்பந்தமாக அக்கோயிலின் பின்புறத்தில் முற்காலத்திருந்த "சிலாசாதனம், திருத்தொண்டர் திருவந்தாதி, திருத்தொண்டர் புராணசாரம், கூற்றுவநாயனர் புராணம், நாலாயிரப் பிரபந்தம், ஒன்பதாந்திருமுறைத் திருவிசைப்பா" என்பவற்றிலிருக்கின்ற ஆதாரங்களையும்; "சிவபத்தியிற்சிறந்த தொப்பைய முதன்மையார், குருபத்தியிற் சிறந்த வேதத்தன்னையார்" என்பவர்கள் செய்த திருப்பணியின் றிறத்தையும் ஒன்றுசேர்த்துச் சிறு புத்தகமாக்கி வெளிப்படுத்தலானேன். குற்றமிருப்பினும் கற்றறிந்த பேரறிவாளர்கள் குணமெனக்கொள்வார்களாக.

திருக்களர், 
7—1—41.

மு. சுவாமிநாத உபாத்தியாயன்.

5-2



உ

கணபதி துணை.

# களப்பாள்

என்னும்

# திருக்களந்தை ஆதித்தேச்சுர வைபவம்.

——(*)——

காப்பு.

அத்தி முகனடி நித்த நினைபவர்
சித்தி திருவொடு முத்தி பெறுவரே.

---

## இராசாதித்தன் வழிபாடு.

---

அநாதி மலமுத்தராய், நித்திய ராய், வியாபகராய், எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லா வநுக்கிரகமு முடையராய் விளங்கும் எண்குணக்கடவுளாகிய நமது பரமேசுவரன் தமது அடியார்களுடைய பக்குவாபக்குவத் துக்குத் தக்கபடி "சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய" பதங் களை யளித்தாள்வதற்கான திருவுருவுடனெழுந்தருளியிருக்கின்ற சிவதலங்கள் பலவற்றுள்ளுஞ் சிறந்தோங்கிய இத்தலம் "இராசா தித்தன்" என்னும் அரசன் உண்டுபண்ணி வழிபட்டது. (கற்பக்கிரகம் பின்புறத்தில் இராசாதித்தேச்சுரம் என்றிருந்த சிலாசாதனம் மறைந்துபோயிற்று.)

## கோச்செங்கட்சோழநாயனர் திருப்பணி.

முற்பிறப்பில் சிலந்தியாயிருந்து, திருவானைக்காவில் வெண்ணுவல் மரத்தடியி லெழுந்தருளியிருக்கின்ற சிவலிங்கப்பெருமான்மீது சருகு உதிரா வண்ணம் வாய்நூலினுல் மேற்பந்தர்செய்து, அதனைப்பிய்த் தெறிந்த யானையின் புழைக்கையிற்புகுந்து, மத்தகத்திற் கடித் துக்கொன்று, தானுமிறந்து, சுபதேவசோழன் மனைவி கமலவதி திருவயிற்றில் மகனுகத்தோன்றி, தென்னூர் என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு, உலகினையாண்ட 'கோச்செங்கட் சோழநாயனர்' பூர்வ வுணர்ச்சியினுலே யானை புகாவண்ணம் திருவானைக்கா முதல் திருவம்பர் இறுதியாகக்கட்டிய திருப் பெருங்கோயில்களாகிய எழுபது மாடக்கோயில்களிலொன் ருகியது.

"மைவைத்தகண்டனெறியன்றிமற்ருேர்நெறிகருதாத்
தெய்வக்குடிச்சோழன்முன்புசிலந்தியாய்ப்பந்தர்செய்து
சைவத்துருவெய்திவந்துதரணிமீடாலயங்கள்
செய்வித்தவன்றிருக்கோச்செங்கணனெனுஞ் செம்பியனே."

(திருத்தொண்டர்திருவந்தாதி)

"வெண்ணுவலிறைக்கொளிநூற்பந்தர்செய்த
வியன்சிலம்பியதுவழித்தவெள்ளானைக்கை
யுண்ணுடிக்கடித்தவுடலொழியச்சோழ
னுயர்குலத்துச்சுபதேவன்கமலத்தோங்கும்
பெண்ணுகியவள்வயிற்றில்வைகிச்செங்கட்
பெருமானுத்தென்னவராய்ப்பெருங்கோயில்பலவுங்
கண்ணுர்வித்துயர்தில்லைமறையவர்க்குமுறையுள்
கனகமயமாக்கியருள்கைக்கொண்டாரே,"

(திருத்தொண்டர் புராணசாரம்)

"இருக்கிலங்குதிருமொழிவாயெண்தோளீசற்கு
எழில்மாடமெழுபதுசெய்துலகமாண்ட
திருக்குலத்துவளவச்சோழன்சேர்ந்தகோயில்."

(நாலாயிரப்பிரபந்தம்)

## கூற்றுவஞயஞர் திருத்தொண்டு.

---

இத்தலத்தை இராசதானியாகக்கொண்டு, புறங்காம்பை நாட்டையாண்ட, குறுநிலமன்னனுகிய கூற்றுவனுயனுர் சிவதிரு நாமமாகிய ஐந்தெழுத்தின் பலத்தினுல் "சோழ சேர பாண்டியர் களைப்போரில்வென்று," சபாநாயகப்பெருமான் தமது திருவடியை முடியாகச்சூட்டப்பெற்று, சபாநாயகப்பெருமானுடைய திரு வுருவத்தைப் பிரபலமாக இத்திருக்கோயிலில் அமைத்து வைத்துத் திருப்பணிசெய்து, சிவபதமெய்தினுர்.

"ஆர்கொண்டவேற்கூற்றன்களந்தைக்கோனடியேன்."

(திருத்தொண்டத்தொகை)

"நாதன்றிருவடியேமுடியாகக்கவித்துநல்ல
போதங்கருத்திற்பொறித்தமையாலதுகைகொடுப்ப
வோதந்தழுவியஞாலமெல்லாமொருகோலின்வைத்தான்
கோதைநெடுவேற்களப்பாளனுகியகூற்றுவனே."

(திருத்தொண்டர் திருவந்தாதி)

"குன்றாத புகழாளர் களந்தை வேந்தர்
கூற்றுவனுர் மாற்றலர்மண் கொண்டுசூடப்
பொன்ருழு முடிவேண்டப் புலியூர்வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனிதனீந்த
மன்றுடுந் திருவடியே முடியாச்சூடி
மாநிலங்காத் திறைவனுறை மாடக்கோயிற்
சென்றுசை யுடன்வணங்கிப் பணிகள்செய்து
திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே."

(திருத்தொண்டர் புராணசாரம்)

"துன்னுர் முனைக டோள்வலியால் வென்று சூலப் படையார்த
நன்ன மந்தந் திருநாவி னுனு நவிலு நலமிக்கார்
பன்ன வீச னடியார்தம் பாதம் பரவிப் பணிந்தேத்தி
முன்னுகிய நற்றிருத்தொண்டின் முயன்ருர் களந்தை முதல்வனுர்.

அருளின் வலியா லரசொதுங்க வவனி யெல்லா மடிப்படுப்பார்
பொருளின் முடிவு காண்பரிய வகையாற் பொலிவித் திகல்சிறக்க
மருளுங் களிறு பாய்புரவி மணித்தேர் படைஞர் முதன்மாற்றார்
வெருளுங் கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார்.

வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துச் செருவில் வாகைத் திறங்கெழுமி
மன்றன் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்துமுடி
யொன்று மொழிய வரசர்திரு வெல்லா முடைய ராயினார்.

மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட வவருஞ் செம்பியர்தந்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோ முடியென்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார்.

ஒருமை யுரிமைத் தில்லைவாழந் தணர்க டம்மி லொருகுடியைப்
பெருமை முடியை யருமைபுரி காவல் பேணும் படியிருத்தி
யிருமை மரபுந் தூயவர்தாஞ் சேரர் நாட்டி லெய்தியபின்
வருமை யுறவான் மனந்தளர்ந்து மன்று ளாடுங் கழல்பணிவார்.

அற்றை நளி லிரவின்க ணடியேன் றனக்கு முடியாகப்
பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டு மெனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவிற் பாத மலரளிக்க
வுற்ற வருளா லவைதாங்கி யுலக மெல்லாந் தனிபுரந்தார்.

அம்பொ னீடு மம்பலத்து ளாரா வமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியின்மகிழ் கோயி லெல்லாந் தனித்தனியே
யிம்பர் ஞாலங் களிகூர வெய்தும் பெரும்பூ சனையியற்றி
யும்பர் மகிழ வரசளித்தே யுமையாள் கணவ னடிச்சேர்ந்தார்.''

(கூற்றுவநாயனார் புராணம்)

இப்புராணம் பன்னிரண்டாந்திருமுறையாகிய திருத்தொண்டர் பெரியபுராணத்துளிருக்கின்றது.

## கருவூர்த்தேவர் திருவிசைப்பா.

திருவிசைப்பாத் திருப்பதிகங்கள் திருவாய்மலர்ந்தருளிய ஒன்பது திருத்தொண்டர்களிலொருவராகியவரும்; "கோயில் என்னும் திருத்தில்லை, திருக்கீழ்க்கோட்டூர்மணியம்பலம், திருமுகத்தலை (பன்னகதெரு), திரைலோக்கியசுந்தரம் (திருலோக்கி), கங்கைகொண்டசோழேச்சரம் (கங்கைகொண்ட சோழபுரம்), திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சையிராசராசேச்சரம் (தஞ்சாவூர்), திருவிடைமருதூர்" முதலிய தலங்களுக்கு திருவிசைப்பாத் திருப்பதிகங்கள் திருவாய்மலர்ந்தருளியவரும் ஆகிய 'கருவூர்த்தேவர்' இத்தலத்தில் அருளிச்செய்த திருவிசைப்பா.

பண் — புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

கலைகடம்பொருளுமறிவுமாயென்னைக்
கற்பினிற்பெற்றெடுத்தெனக்கே
முலைகடந்தருளுந்தாயினுநல்ல
முக்கணனுறைவிடம்போலு
மலைகுடைந்தனையநெடுநிலைமாட
மருங்கெலாமறையவர்முறையொத்
தலைகடன்முழங்குமந்தணீர்க்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (க)

சந்தனகளபந்துதைந்தநன்மேனி
தவளவெண்பொடிமுழுதாடுஞ்
செந்தழலுருவிற்பொலிந்துநோக்குடைய
திருநுதலவர்க்கிடம்போலு
மிந்தனவிலங்கலெறிபுனந்தீப்பட்
டெரிவதொத்தெழுநிலைமாட
மந்தணரழலோம்பலைபுனற்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (உ)

கரியரேயிடந்தான்செய்யரேயொருபாற்
கழுத்திலோர்தனிவடஞ்சேர்த்தி
முரிவரேமுனிவர்தம்மொடாலிழற்கீழ்
முறைதெரிந்தோருடம்பினரா
மிருவரேமுக்கணாற்பெருந்தடந்தோ
ளிறைவரேமறைகளுந்தேட
வரியரேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (௩)

பழையராந்தொண்டர்க்கெளியரேமிண்டர்க்
கரியரேபாவியேன்செய்யும்
பிழையெலாம்பொறுத்தென்பிணிபொறுத்தருளாப்
பிச்சரேநச்சராமிளிரும்
குழையராய்வந்தென்குடிமுழுதாளுங்
குழகரேயொழுகுநீர்க்கங்கை
யழகரேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (௪)

பவளமேமகுடம்பவளமேதிருவாய்
பவளமேதிருவுடம்பதனிற்
றவளமேகளபந்தவளமேபுரிநூ
றவளமேமுறுவலாடரவந்
துவளுமேகலையுந்துகிலுமேயொருபாற்
றுடியிடையிடமருங்கொருத்தி
யவளுமேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (௫)

நீலமேகண்டம்பவளமேதிருவாய்
நித்திலநிரைத்திலங்கினவே
போலுமேமுறுவனிறையவானந்தம்
பொழியுமேதிருமுகமொருவர்
கோலமேயச்சோவழகிதேயென்று
குழைவரேகண்டவருண்ட
காலமேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (௬)

திக்கடாநினைந்துநெஞ்சிடிந்துருகுந்
திறத்தவர்புறத்திருந்தலச
மைக்கடாவனையவென்னையாள்விரும்பி
மற்றொருபிறவியிற்பிறந்து
பொய்க்கடாவண்ணங்காத்தெனக்கருளே
புரியவும்வல்லரேயெல்லே
யக்கடாவாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (எ)

மெய்யரேமெய்யர்க்கிடுதிருவான
விளக்கரேயெழுதுகோல்வளையாண்
மையரேவையம்பலிதிரிந்துறையு
மயானரேயுளங்கலந்திருந்தும்
பொய்யரேபொய்யர்க்கடுத்தவான்பளிங்கின்
பொருள்வழியிருள்கிழித்தெழுந்த
வையரேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (அ)

குமுதமேதிருவாய்குவளையேகளமுங்
குழையதேயிருசெவியொருபால்
விமலமேகலையுமுடையரேசடைமேன்
மிளிருமேபொறிவரிநாகங்
கமலமேவதனங்கமலமேநயனங்
கனகமேதிருவடிநிலைநீ
ரமலமேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே. (கூ)

நீரணங்கசும்புகழனிசூழ்களந்தை
நிறைபுகழாதித்தேச்சரத்து
நாரணன்பரவுந்திருவடிநிலைமே
னலமலிகலைபயில்கருவூ
ராரணமொழிந்தபவளவாய்சுரந்த
வமுதமூறியதமிழ்மாலை

யோணங்கிருநான்கிரண்டிவைவல்லோ
ரிருள்கிழித்தெழுந்தசிந்தையரே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

களப்பாள் என்பது மரூஉமொழிபெற்று 'களந்தை; எனவும்; இராசாதித்தேச்சரம் என்பது முதற்குறைபெற்று 'ஆதித்தேச்சரம்' எனவும் வழங்கலாயின.

## வேதத்தன்னையார் திருப்பணி.

---

இத்தலத்திலே பரம்பரைச்சைவ வேளாளராகிய தொண்டைமண்டல முதன்மையார் மரபிலே "சீவகாருண்யம், பாசவைராக்கியம், ஈசுரபத்தி" என்பவற்றைத் திருமேனியாகக் கொண்டு திருவவதாரஞ்செய்திருக்கின்றவரும்; "மங்கையர்க் கரசியார், காரைக்காலம்மையார்" என்பவர்களைப்போன்றவரும்'

"மக்களாக்கையிற்பிறத்தலேயரிதுமற்றதிலுந்
துக்ககூன்குருடூமையைத்துறத்தலுமரிது
நற்குலத்திடைவருதலுமரிதுஞானத்தான்
முக்கணீசனுக்காட்படல்முற்றிலுமரிதே."

"மானிடப்பிறவிதானும்வகுத்ததுமனவாக்காய
மானிடத்தைந்துமாடுமரன்பணிக்காகவன்றோ
வானிடத்தவருமண்மேல்வந்தரன்றனையர்ச்சிப்ப
ரூனெடுத்துழலுமூமரொன்றையுமுணராரந்தோ."

கண்ணுதலாலயநோக்குங்கண்களேகண்கள்
கறைக்கண்டன்கோயில்புகுங்கால்களேகால்கள்
பெண்ணொருபாகனைப்பணியுந்தலைகளேதலைகள்
பிஞ்ஞகனைப்பூசிக்குங்கைகளேகைகள்
பண்ணவன்றன்சீர்பாடுநன்னாவேநன்னாப்
பரன்சரிதையேகேட்கப்படுஞ்செவியேசெவிக

ளன்னல்பொலங்கழனினைக்குநெஞ்சமேநெஞ்ச
மவனடிக்கீழடிமைபுகுமடிமையேயடிமை.''

"புலையரேயேனுமீசன்பொலன்கழலடியிற்புந்தி
நிலையரேலவர்க்குப்பூசைநிகழ்த்துதனெறியே யென்றுந்
தலையரேயெனினுமீசன்றாமரைத்தாளினேச
மிலரெனிலியற்றும்பூசைப்பலந்தருவாரேயாரே."

"எள்ளற்படுகீழ்மக்களெனுமிழிந்தகுலத்தோராயினும்
வள்ளற்பரமன்றிருநீறுமணியுமணிந்தமாண்பினரை
யுள்ளத்துள்ளேயிருபோதுமுணர்ந்துதெருண்டுசிவனெனவே
கொள்ளத்தகையவறிவினரேபிறவிக்கடலிற்குளியாதார்."

"தேசிகர்தம்மைச் சிவநேசர் தம்மையு
மீசனென வேயுளத்து ளெண்."

என்றபடி மனிதப்பிறவியினாலடையத்தக்கது இம்மையிற் பத்தியும், மறுமையில் முத்தியுமென்பதை நன்குணர்ந்து, இடையறாது திருத்தொண்டுசெய்கின்றவரும்; திருக்களரில் ஆருத்திரா தரிசனோற்சவத்தைச் சிறப்பாகச் செய்விக்கின்றவரும்; திருக்களரில் திருக்கோயில்கொண்டுவிளங்கும் வீரசேகரமகாமுனிவருடைய மாணாக்கர்களிலொருவராகிய நாராயணசாமிஞானதேசிக சுவாமிகளிடத்தில் ஞானோபதேசம்பெற்றவரும்; அக்குருமூர்த்திகள் கட்டளையிட்டருளியபடி இக்கோயிற்றிருப்பணியை நன்கு பெறச்செய்துமுடித்தவருமாகிய வேதத்தன்னையார் அவர்களுக்கு ஆதித்தேசுரர் அருள்புரிவாராக.

இவ்வன்னையார் வடபாதிமங்கலம் சோமசுந்தர முதன்மையாரவர்களுடைய சகோதரராகிய இராமலிங்கமுதன்மையாரவர்களைக் கணவனாகப்பெற்றவர். "வைத்திலிங்கமுதன்மையார், குப்பையமுதன்மையார், தொப்பையமுதன்மையார், குமாரப்ப முதன்மையார், இராசப்பமுதன்மையார்" என்னுஞ்சகோதரர்களையுடையவர். "அக்கரைக்கோட்டம், ஆர்வலம், காவாலக்

குடி, கொக்காலடி, கொந்தை, கோடிவிநாயகநல்லூர், கோட்டூர், கோமாளப்பேட்டை, திருத்தெங்கூர், திருநெல்லிக்கா, நரிக்குடி, நெடும்புலம், பனங்குடி, பாம்பணி, பூவனூர், மன்னார்குடி, வரம்பயம், வாழைக்கரை, விளக்குடி'' முதலியவூர்களிலிருக்கின்ற முதன்மைப்பிரபுப் பந்துக்கள் சூழப்பெற்றவர்.

இவ்வன்னையாருடைய சகோதரர்களிலே அருச்சுனனைப் போல் நடுப்பிறந்தவராகிய தொப்பையமுதன்மையார் இத்திருப்பணியை ஆரம்பித்தகாலத்திலே ஐவர்களினிடையில் ஒற்றுமை என்னும் உத்தமனும், அன்பு என்னும் அன்பனும், உதவி என்னும் உறவினனும் அணுகியிருந்தால் 'கோச்செங்கட்சோழ நாயனர்' திருப்பணியைப்பார்க்கிலும் எண்மடங்கு அதிகமாகவும்; கூற்றுவநாயனர் பரிபாலனத்தைப்பார்க்கிலும் பன்மடங்கு அதிகமாகவும் நடைபெற்றிருக்குமென்பதிற் சிறிதுஞ்சந்தேகமில்லை.

"அன்புஞ்சிவமுமிரண்டென்பாறிவிலார்
அன்பேசிவமாவதாருமறிகிலார்
அன்பேசிவமாவதாருமறிந்தபின்
அன்பேசிவமாயமர்ந்திருந்தாரே."

"சிவசிவவென்கிலர் தீவினையாளர்
சிவசிவவென்றிடத் தீவினைமாளும்
சிவசிவவென்றிடத் தேவருமாவர்
சிவசிவவென்னச் சிவகதிதானே."

"சிவாயநமவெனச்சித்தமொருக்கி
யவாயமறவேயடிமையதாக்கிச்
சிவாயசிவசிவவென்றென்றேசிந்தை
யவாயங்கெடநிற்கவானந்தமாமே."

(திருமந்திரம்)

சமயகுரவர் நால்வருளொருவரும், நாயன்மார் அறு

பத்துமூவருளொருவரும் ஆகிய 'திருநாவுக்கரசுநாயனூர்' மனிதப் பிறவியினுலடையத்தக்க ஆன்மலாபத்தை வீணே இழந்து பிறந் திறந்துழலும் மாந்தர்களுக்கு அறிவுறுத்தும்பொருட்டு எல்லாஞ் சிவமயமென்பதையும், சிவதிருத்தொண்டு சீவர்களுக்குரித்தான தென்பதையும், மனிதசரீரத்தின் ஒவ்வொரு பகுதியுஞ்செய்ய வேண்டிய திருத்தொண்டின்னதென்பதையும் விளக்குகின்றார்.

(பலவகைத்திருத்தாண்டகம்)

"தந்தையார்தாயாருடன்பிறந்தார்
தாரமார்புத்திரரார்தாந்தாமாரே
வந்தவாறெங்ஙனேபோமாறேதோ
மாயமாமிதற்கேதுமகிழவேண்டாம்
சிந்தையீருமக்கொன்றுசொல்லக்கேண்மின்
றிகழ்மதியும்வாளரவுந்திளைக்குஞ்சென்னி
எந்தையார்திருநாமநமச்சிவாய
வென்றெழுவார்க்கிருவிசும்பிலிருக்கலாமே."

(தனித்திருத்தாண்டகம்.)

"திருக்கோயிலில்லாததிருவிலூருந்
திருவெண்ணீறணியாததிருவிலூரும்
பருக்கோடிப்பத்திமையாற்பாடாவூரும்
பாங்கினொடுபலதளிகளில்லாவூரும்
விருப்போடுவெண்சங்கமூதாவூரும்
விதானமும்வெண்கொடியுமில்லாவூரும்
அருப்போடுமலர்பறித்திட்டுண்ணாவூரு
மவையெல்லாமூரல்லவடவிகாடே."

"திருநாமமஞ்செழுத்துஞ்செப்பாராகிற்
றீவண்ணர்திறமொருகாற்பேசாராகில்
ஒருகாலுந்திருக்கோயில்சூழாராகி
லுண்பதன்முன்மலர்பறித்திட்டுண்ணாராகில்

அருநோய்கள்கெடவெண்ணீறணியாராகி
லளியற்றார்பிறந்தவாறேதோவென்னில்
பெருநோய்கண்மிகநலியப்பெயர்த்துஞ்செத்துப்
பிறப்பதற்கேதொழிலாகியிறக்கின்றாரே.''

## திருவங்கமாலை.

பண்—சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

" தலையேநீவணங்காய்—தலை
மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்
தலையேநீவணங்காய். (௧)

கண்காள்காண்மின்களோ—கடல்
நஞ்சுண்டகண்டன்றன்னை
எண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக்
கண்காள்காண்மின்களோ. (௨)

செவிகாள்கேண்மின்களோ—சிவன்
எம்மிறைசெம்பவள
எரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதும்
செவிகாள்கேண்மின்களோ. (௩)

மூக்கேநீமுரலாய்—முது
காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை
மூக்கேநீமுரலாய். (௪)

வாயேவாழ்த்துகண்டாய்—மத
யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை
வாயேவாழ்த்துகண்டாய். (௫)

நெஞ்சேநீநினையாய்—நிமிர்
புன்சடைநின்மலனை
மஞ்சாடும்மலைமங்கைமணாளனை
நெஞ்சேநீநினையாய். (௬)

கைகாள்கூப்பித்தொழீர்—கடி
மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக்
கைகாள்கூப்பித்தொழீர். (௭)

ஆக்கையாற்பயனென்—அரன்
கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ்
ஆக்கையாற்பயனென். (௮)

கால்களாற்பயனேன்—கறைக்
கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக்
கால்களாற்பயனென். (௯)

உற்றாருளரோ—வுயிர்
கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக்
குற்றாருளரோ.'' (௰)

திருச்சிற்றம்பலம்.

---

முற்றத்துறந்த முழுஞானியாகிய பட்டினத்தடிகள் மனிதப்பிறவியினாலடையத்தக்கபயனை நன்குபுலப்படுத்துகின்றார்.

"நல்லாரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாதுவேறு நிலையுளதோ வகமும் பொருளு
மில்லாளுஞ்சுற்றமு மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பு
மெல்லாம் வெளிமயக்கே யிறைவாகச்சி யேகம்பனே''
(திருவேகம்பமாலை.)

" மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாயின்மட்டே
இனமான சுற்றம யானமட் டேவழிக் கேதுதுணை
தினையா மளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே.

அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே."

(திருத்தில்லை.)

ஆதித்தேசுரர் ஆலயத்தைப்பாதுகாக்காமற் படுத்திருக்குந் திருமதில்கள் எழுந்துநின்று பாதுகாக்கவும்; வெடித்துச் சரிந்து, இடிந்து விழுந்துகொண்டிருக்கும் இராசகோபுரம் எழுந்து விலகிப்போகவும் எல்லாம் வல்ல இறைவன் இன்னருள் பாலிப்பாராக.

---

திருக்களந்தை ஆதித்தேச்சுர வைபவம்





கருணாநிதி (பில்டிங்ஸ்) பிரஸ், விஜயபுரம். 41 pr